Licensed to Post Without Pre-Payment Licence No 6T N MS CPP 55

Progressive Tamil Daily to the People

# பெண்களுக்கு சொத்துரிமை தர

Regd No. TN MS [C] 244 Phone 420212 4 பக்கம் விலை 70 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 12 சென்னை ஞாயிறு 6 12 87 வெளியூர் திங்கள் 7-12-87 இதழ் 50

# புரட்சித்தலைவர் புதுசட்டம்



## "பரம்பரை சொத்தில் பெண்களுக்கு சமபங்கு"

கொடைக்கானல், டிச. 6- தமிழகத்தில் இந்து குடும்பங்களில் உள்ள பெண்களுக்கு பரம்பரைச் சொத்துக்களில் சம உரிமை பெற வகை செய்யும் சட்ட திருத்தத்தை முதல்வர் புரட்சித்தலைவர் கொண்டு வர இருக்கிறார்.

கொடைக்கானலில் பெண்களுக்காக அமைக்கப்பட்டுள்ள தனிப்பல் கலைக் கழகமான அன்னை தெரேசா மகளிர் பல்கலைக் கழகத்தில் கம்ப்யூட்டர் மையத்தை அமைச்சர் பொன்னையன் துவக்கி வைத்தார்.

அப்போது அவர் பேசுகையில் கூறியதாவது:

தாய்மார்களிடையே விழிப்புணர்ச்சி ஏற்பட்டு, அவர்களும் ஆண்களுக்குச் சரி நிகர் சமானம் என்கிற நிலைமை உருவாகவேண்டும். இப்படிப்பட்ட சீரிய பணிகளை அன்னை தெரேசா பல்கலைக்கழகம் மேற்கொள்ளவேண்டும்.

பெண்களுக்கு எதிராக விளைவிக்கப்படும் சமூகக் கேடுகளைக் களைந்திட சீரிய பணிகள் மேற்கொள்ளுதல் அவசியம்.

அப்படிப்பட்ட பணிகளின் அடிப்படையில், இந்து வாரிசு சட்டத்தை திருத்தி தமிழ் நாட்டில் உள்ள பெண்கள், தங்கள் குடும்பத்தின் பரம்பரைச் சொத்தில் பங்கு பெறுவதற்கு வகை செய்ய முதல்வர் புரட்சித்தலைவர் முடிவு செய்துள்ளார்.

இதற்காகசட்டத்தில்வெகு தீவிரமாற்றம் கொண்டுவரப்படும்.

இவ்வாறு அமைச்சர் பொன்னையன் கூறினார்.

## ஆண்டு திட்டம்: அதிகாரிகள் குழு டெல்லி பயணம்

சென்னை, டிச. 6- தமிழ்நாட்டுக்கான ஆண்டு திட்டம் குறித்து மத்திய திட்டக்குழுவுடன்விவாதித்து இறுதி செய்வதற்காக தமிழக அதிகாரிகள் குழு வரும் 9 ந் தேதி டெல்லி செல்கிறது.

தமிழகத்திற்கான ஆண்டுத் திட்டம் குறித்து விவாதித்து இறுதி செய்யப்படும்.

## கடைசி செய்தி: புயல் கரை கடந்தது

சென்னை, டிச. 6 மதுரை மாவட்டத்தில் பல்வேறு இடங்களில் தொடர் மழை பெய்கிறது கடந்த 36மணி நேரமாக மதுரை நகரில்மழைபெய்து கொண்டிருக்கிறது இன்று காலை புயல் கரையை கடந்தது.

நேற்று காலை 8 மணிக்கு மதுரை நகரில் பெய்யத் தொடங்கிய மழை இன்று பகல் 1 மணி வரையிலும் பெய்து கொண்டே இருந்தது மழை பெய்துள்ள அளவு விவரம் வருமாறு:-

மதுரை 4.2.மி.மீ. பெரியார் 8மி.மீ.தேக்கடி 12மி.மீ வைகை35. மி. மீ. பேரணை 45மி.மீ, மழைபெய்துள்ளது. பெரியார் அணையில் 125.50 அடி தண்ணீரும் வைகையில் 62.60 அடி தண்ணீரும் உள்ளன.

காரைக்காலுக்கு அருகே கடலில் மையம் கொண்டிருந்த புயல் இன்றுஅதிகாலை கரையை கடந்ததாக வானிலை ஆராய்ச்சி நிலையம் அறிவித்தது.



சென்னையில் நடைபெற்ற ஜல்லிக்கட்டு பட நூறாவதுநாள் விழாவில் முதல்வர் புரட்சித் தலைவர் சிவாஜிக்கு கேடயம் வழங்கி அன்புடன் முத்தமிடும் காட்சி

# முதல்வர் புரட்சித்தலைவரிடம் சிவாஜி கேடயம் பெற்றார்



சென்னை, டிச. 6- ஜல்லிக்கட்டு பட நூறாவது நாள் விழாவில் முதல்வர்புரட்சித்தலைவர் பங்கேற்று சிவாஜி உள்ளிட்டோருக்கு கேடயங்கள் வழங்கினார்.

ஜல்லிக்கட்டு திரைப்படத்தின் 100-வது நாள் விழா சென்னை வள்ளுவர் கோட்டத்தில் நடந்தது விழாவில் முதல்வர் புரட்சித்தலைவர் கலந்துகொண்டு திரைக் கலைஞர்களுக்கு கேடயங்களை வழங்கினார்.

விழா மேடைக்கு சரியாக 6 மணிக்கு முதல்வர்புரட்சித் தலைவர் வந்தார். கூடியிருந்தபொதுமக்கள்மகிழ்ச்சி ஆரவாரம் பொங்க புரட்சித் தலைவர் வாழ்க' என்று விண்ணதிர கோஷமிட்டு முதல்வரை வரவேற்றனர். புன்னகை பூத்த முகத்துடன் முதல்வர் மேடையில் தோன்றினார்.

விழா மேடைக்கு புரட்சித் தலைவர் வந்ததும் நடிகர் சிவாஜி மேடைக்கு வந்தார். இருவரும் அன்புடன் ஆரத் தழுவிக் கொண்டனர் ரசிகர்கள் பலத்த காகோஷம் எழுப்பி தங்கள் மகிழ்ச்சியை தெரிவித்தனர்.

சித்ராலட்சுமணன் வரவேற்புரை கூற விழா ஆரம்பமானது திரைப்பட அதிபர்கள் சங்கத்தலைவர் டி.ராமானுஜம் தலைமைவகித்தார்.

விழாவில் முதல்வர் புரட்சித்தலைவருக்கு பொன்னாடை போர்த்தப்பட்டது.

சிவாஜிகணேசன் பேசும் போது, நமது அன்பான முதல்வர் கலையுலகில் மூத்தவர். அவரது வாழ்த்துக்களை இளைய தலைமுறையினர் பெறும் வாய்ப்பு கிடைத்துள்ளது. இந்த வாழ்த்து இளைய தலைமுறையினரை உற்சாகமாக வழிநடத்தும் என்று குறிப்பிட்டார்.

எழுத்தாளர் சிவசங்கரி பேசுகையில் நமது முதல்வர் தமிழ்நாட்டுத் தலைவர் மட்டுமல்ல உலகத்தின் தலைவா என்று குறிப்பிட்டார்.

சித்ராலட்சுமணன் தனது வரவேற்புரையில் "கலையுலக கடவுள் எங்கள் முதல்வர்" என்று குறிப்பிட்டார்.

இயக்குநர் பாரதிராஜா பேசும்போதுஎங்கள்முதல்வர் எல்லாம்அறிந்தவர்.அவருக்கு எல்லோருடைய பிரச்சினையும் தெரியும் ராயபுரத்தில் துமமினால் அது ராமாவரம் தோட்டத்தில் கேட்கும் எல்லா பிரச்சினைகளையும் அறிந்து அதை தீர்த்து வைக்கிறவராக நமது முதல்வர் உள்ளார் என்று குறிப்பிட்டார்.

இயக்குநர் மணிவண்ணன் பேசி முடித்த உடன் விழாத்தலைவர் ராமானுஜம் இப்போது முதல்வர் கலைஞர்களுக்கு கேடயங்களை வழங்குவார் என்று கூறினார்.

முதல்வர் ராமானுஜத்தை அழைத்து சத்யராஜ் மற்றும் ராதா ஆகியோரை பேசும்படி கூறினார்.

பின்னர் சத்யராஜ், ராதா, நம்பியார் ஆகியோர் பேசினர்.

நம்பியார் மாண்புமிகு முதலமைச்சர் அவர்களே வணக்கம்என்றுகூறிஇருக்கையில் அமர்ந்ததும் முதல்வர் கையை நீட்டி புன்னகையுடன் செல்லமாக தட்டினார்.

கூட்டத்திலிருந்தவர்கள் 'தலைவா எங்கள் முதல்வா' என்று உற்சாக குரல் எழுப்பினர்.

புரட்சித்தலைவர் எழுந்து நின்று கையை அசைத்து "உங்களுக்கு என்ன வேண்டும் நான் உங்கள் பக்கம்வருகிறேன்" என்று மிகவும் உற்சாகமாக கூறினார்.

### அன்பு பரிசு

பின்னர் கேடயம்வழங்கும் நிகழ்ச்சி நடந்தது.

நடிகர் சிவாஜிக்குமுதல்வர் கேடயம் வழங்கி அன்புடன் கன்னத்தில் முத்தமிட்டார். நடிகர்நம்பியாருக்கு கேடயம் வழங்கிய உடன் புரட்சித் தலைவரிடம் கன்னத்தைக் காட்டி தனக்கு முத்தம் தர வேண்டினார். புரட்சித் தலைவர் மறுத்தார். நம்பியார் பிடிவாதமாக முத்தம் தர வேண்டும் என்று கெஞ்ச முதல்வர் புன்னகையுடன் முத்தமிட்டார் நம்பியாரும் பதிலுக்கு முதல்வர் கன்னத்தில் முத்தமிட்டார். அப்போது கூடியிருந்தவர்கள் பலத்த கரவொலிஎழுப்பி ஆரவாரம் செய்தனர்.

நடிகர் சத்யராஜ், ராதா, இயக்குநர் மணிவண்ணன், வியட்நாம் வீடு சுந்தரம், படஅதிபர்கள் சித்ரா லட்சுமணன், ராமு ஆகியோர் முதல்வர் கையால் கேடயங்களைப் பெற்றனர்.

பரிசு பெற்ற பலரும் முதல்வரின் காலில் விழுந்து ஆசி பெற்றனர்.

தொழில் நுட்பக் கலைஞர்களுக்கு பாரதிராஜாவும் நடிகர் கமலஹாசனும் பரிசுகளை வழங்கினர்.

விழாவில் வாரியத்தலைவர்கள் ஜேப்பியார், மணிமாறன், நா. காமராசன் சட்டமன்ற உறுப்பினர் சைதை துரைசாமி படஅதிபர் உமாபதி இயக்குநர் சி.வி. ராஜேந்திரன் மற்றும் ஏராளமான திரையுலக பிரமுகர்களும்கழகத் தோழர்களும் கலந்து கொண்டனர்.

### மின் விளக்கு அலங்காரம

சாலை நெடுக முதல்வர் புரட்சித்தலைவரை வரவேற்க ஏராளமான பொது மக்கள் கூடியிருந்து 'புரட்சித்தலைவா வாழ்க' என்று வாழ்த்து முழக்கமிட்டு வரவேற்றனர். இந்த நிகழ்ச்சி முடிந்து முதல்வர் புரட்சித் தலைவர் 8 45 மணி அளவில் புறப்பட்டுச்சென்றார்.

முதல்வர் வருகையையொட்டி வள்ளுவர் கோட்டம் மின் விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டு தேவலோகம் போல் காட்சி அளித்தது படஅதிபர் சித்ரா ராமு நன்றி கூறினார்.

## "மக்கள் எம். ஜி. ஆரைத்தான் நம்பியிருக்கிறார்கள்"

# தி.மு.க. மனோகரனுக்கு தெளிவு உண்டாக்குகிறார் பத்திரிகைஆசிரியர்ராமன்

சென்னை, டிச. 6- தமிழக மக்கள் முதல்வர் எம்.ஜி.ஆரைத்தான் நம்பி இருக்கிறார்கள் என்று நாஞ்சில் மனோகரனைச் சந்தித்த "இல்லஸ்ட்ரேட்டட் வீக்லி" ஆங்கில இதழின் முன்னாள் ஆசிரியர் ஏ.எஸ். ராமன் கூறினார்.

"குமுதம்" இதழுக்காக நாஞ்சில் மனோகரனும் ஏ எஸ் ராமனும் சந்தித்து பேசினர்.

எம். ஜி. ஆர். பதவியில் இருக்கும் வரை அண்ணா தி. மு. க.வை தி. மு. க. எப்படிஜெயிக்கமுடியும்என்று நினைக்கிறீர்கள் என்று மனோகரனை ராமன் கேட்டுள்ளார்.

அதற்கு மனோகரன், இப்போது எம்.ஜி.ஆரிடம் உள்ளது....' என்று இழுக்கும் போது ராமன் குறுக்கிட்டு "மக்களிடத்தில் அவர் செல்வாக்கு இழந்துவிட்டார் என்று சொல்வதற்கான காரணங்கள் இருப்பதாக தெரியவில்லையே இன்னமும் மக்கள் அவரைத்தான் நம்பியிருக்கிறார்கள்'' என்று கூறினார்.

கருணாநிதிக்குப் பிறகு திமுகவின் நிலை என்ன என்று ராமன்கேட்டுள்ளார்.

அதற்கு மனோகரன் பதிலளிக்கையில் "கலைஞருக்கு பிறகு பேராசிரியர் தி.மு.க.வைக் கட்டி காத்து வழி நடத்துவார் பேராசிரியருக்கும் பிறகு நானே தி.மு.க.வை நடத்த முடியும்'' என்று பதிலளித்துள்ளார்.

## கப்பலில் தீ: மாலுமிகள் காணவில்லை

மாட்ரிட். டிச. 6- பனாமா நாட்டில் பதிவு செய்யப்பட்ட சாக்கு கப்பல் ஒன்று தீப்பிடித்ததில் 9பேர் மாணமடைந்தனர் ஸ்பெயினுக்கு வடமேற்கு பகுதியில் உள்ள கடல்பகுதியில் இச் சம்பவம் நடந்ததாக லா கொருனாவில் துறைமுக அதிகாரிகள் கூறினார்.

பலத்த காயமடைந்த 3 மாலுமிகள் லா கொருனாவில் உள்ள மருத்துவமனைக்கு ஹெலிகாப்டர் மூலம் எடுத்துச்செல்லப்பட்டனர் 14 மாலுமிகளை காணவில்லை கடலில் இருந்த 5 மாலுமிகளை அப்பகுதியில் சென்ற இதர கப்பல்கள் காப்பாற்றின.

## சேலம்நகராட்சியை திவால்ஆக்கியது தி.மு.க.

# தி. மு. க. நகராட்சி சம்பளம் தராததால் ஆசிரியை மரணம்

சேலம், டிச. 6- சேலம் நகராட்சியில் ஒரு ஆசிரியைக்கு சம்பளம் கொடுக்காததால் அந்த ஆசிரியை வறுமையில் உழன்று இறந்துள்ளார் அந்த அளவுக்கு நகராட்சியை தி.மு.க. திவாலாக்கியது.

சேலம் நகராட்சிப் பள்ளியில் ஆசிரியையாக வேலை பார்த்து வந்தவர் விஜயலட்சுமி. இவருக்கு பல நாட்களாக சம்பளம்கொடுக்காததால் வறுமையில் உழன்று அவர் இறந்துள்ளார்.

அவரது வறுமைக்கு நகராட்சி சம்பளம் கொடுக்காததே காரணம் அந்த ஆசிரியையின் ஏழு நாள் சம்பள பாக்கியைக்கூட கொடுக்க முடியாதஅளவுக்கு சேலம் நகராட்சியைத் திமுகவினர் திவாலாக்கி உள்ளனர்

சம்பள பாக்கியை விரைவில் பட்டுவாடா செய்யுமாறு நகராட்சி அதிகாரிகளை கோரி விஜயலட்சுமியின் குடும்பத்தார் பலமுறை மனுக்கள் கொடுத்திருந்தனர். இதற்கு நகராட்சி எந்தவித நடவடிக்கையும் எடுக்கவில்லை. நிதிஇல்லாததால் சம்பளம் தரவில்லை என்று சாக்கு போக்கு கூறுகின்றனர்.

அந்த ஆசிரியை இறந்த பிறகு அவரது குடும்பத்திற்கு உடனடியாக சம்பள பாக்கியை தருமாறுநகராட்சி தலைவர் சூடாமணி உத்தரவிட்டுள்ளார்.

# வில்லிவாக்கம் தொகுதியில் இடைத்தேர்தல் ஏற்பாடு தீவிரம்

புதுடெல்லி, டிச 6- தமிழகத்தில் வில்லிவாக்கம் தொகுதி உள்பட பல்வேறு மாநிலங்களிலும் நாடாளுமன்றம்மற்றும்சட்டசபைக்கான இடைத் தேர்தல் நடைபெறுவதற்குதேர்தல் கமிஷன் தீவிர ஏற்பாடுகள் செய்து வருகிறது,

காலியாக உள்ள நாடாளுமன்ற தொகுதிகளில் இடைத் தேர்தல் நடத்தப்படவிருக்கிறது.

உத்திர பிரதேசத்தில் அலகாபாத் ராஜஸ்தான் மாநிலத்தில் பாலி ஆகிய தொகுதிகள் உள்பட 7இடங்களுக்கான நாடாளுமன்ற இடைத் தேர்தல் நடக்க வேண்டும்,

### 7 எம் எல் ஏ தொகுதி

சட்டசபை தொகுதிகளை பொறுத்தமட்டில் உத்திர பிரதேசத்தில் மட்டும் 3 தொகுதிகளுக்கு இடைத் தேர்தல் நடத்த வேண்டும். தமிழகத்தில் வில்லிவாக்கம் தொகுதியிலும் இடைத் தேர்தல் நடைபெறவுள்ளது. ஆக நாடாளுமன்றத்துக்கு 7 தொகுதிகளிலும் சட்டசபைக்கு 7 தொகுதிகளிலும் இடைத்தேர்தல்களைநடத்தி தேர்தல்கமிஷன் நடவடிக்கை மேற்கொண்டுள்ளது.

தேர்தல் நடத்துவதற்கான விவரங்கள் கோரி தேர்தல் கமிஷன்சம்பந்தப்பட்ட மாநிலங்களுக்கும் தாக்கீது அனுப்பியிருக்கிறது.

உத்தர பிரதேசத்தில் அலகாபாத் தொகுதிக்கு தேர்ந்தெடுக்கப்பட்ட நாடாளுமன்ற உறுப்பினர் பதவியைஇந்திசினிமா நடிகர் அமிதாபச்சன் ராஜினாமா செய்தது தெரிந்ததே.

# நகர்ப்புற நில உச்சவரம்பு சட்டத் திருத்தம்: கோபாலன் கோரிக்கை

புதுடெல்லி, டிச. 6-
நகர்ப்புற நில உச்சவரம்பு மற்றும் சீரமைப்புச் சட்டத்தை உடனடியாக மாற்றி அமைக்கவேண்டுமென்று மாநிலங்களவையில் கழகஎம்பிகம்பம் கோபாலன் வலியுறுத்தினார்.

மாநிலங்களவையில் கழக எம் பி கம்பம் ஆர். டி. கோபாலன் கூறியதாவது:-

இந்தியாவின் முதுகெலும்பு விவசாயம் என்று கூறுகின்றோமே தவிர இந்திய விவசாயிகள் பெரும்பாலோர் இன்னமும் வறுமை கோட்டிற்குக் கீழ்தான் இருக்கின்றாகள் நாட்டின் நலனுக்காகவே உழைத்து உழைத்து உருக்குலைந்துவிட்ட ஒரே வர்க்கம் இன்றைக்கு விவசாய வர்க்கம் தான்.

மெழுகுவர்த்தியானது தன்னைத்தானே எரித்துக் கொள்ளும் போதுதான் நமக்கு வெளிச்சம் கிடைக்கின்றது இந்தநிலையில் தான் நமது விவசாயிகளும் உள்ளனர் அவர்கள் கண்ணீர் துடைக்கப்படா விட்டால் குறைகள் களையப்படா விட்டால் இந்த நாடே இருளில் மூழ்க நேரிடும்.

## வறட்சி

வறட்சியாலும், வெள்ளத்தாலும் இந்தியா பாதிக்கப்பட்டுள்ள இந்த நிலையில், போதுமான அளவு தானியம் சேமிக்கப் பட்டுள்ளதாகவும், பஞ்சம் என்ற கேள்விக்கே இடம் இல்லை என்றும் உணவு அமைச்சர் அடிக்கடி இந்தப் பேரவையில் கூறியுள்ளார்.

இதற்கு காரணம் கோடான கோடி ஏழை விவசாயிகளின் ஈடற்றஉழைப்பே என்பதை என்றேனும் கூறியிருக்கின்றாரா என்றால் இல்லைகாரணம் நம்முடைய நாட்டில் இன்றைக்கு முறையான அமைப்பு இல்லாத தொழில் விவசாயம்தான்பிற தொழில்கள் பாதிக்கப்படும் போது போராட்டம் வேலை நிறுத்தம் என்னும் வலுவான ஆயுதங்களை அவர்களால் பயன் படுத்த முடிகிறது. ஏனென்றால் அவர்கள் அதற்கென்றே அமைப்புக்களை வைத்து இருக்கின்றனர். ஆனால் அறியாமையாலும் நேரம் இல்லாத காரணத்தாலும் விவசாயிகள் குட்டக்குட்ட குனிந்துகொண்டே இருக்கின்றார்கள். மற்ற தொழிலாளிகள் போன்று விவசாயிகள் பேரம்பேசமுடியாது நடவையும்அறுவடையையும்தள்ளிப் போடமுடியாதுஅவைகாலத்தில் நடந்தே ஆக வேண்டுமென்ற கட்டாயத்திற்கு அவன் தள்ளப்படுகின்றான்.

இத்துடன் இல்லாமல் மத்திய அரசும் பிற மாநில அரசும் நகர்ப்புற மேம்பாட்டுத் திட்டம் நகர் வாழ் ஏழை மக்களுக்கு வீடுகட்டும் திட்டம்என்றபெயரில்ஆண்டு தோறும் சாகுபடி நிலங்களை தாம் எடுத்து வீடு கட்டவும் பிற காரியங்களுக்கும் பயன் படுத்துகின்றன அவ்வாறு நிலங்களை அரசு எடுக்கும் போது பெரும் பாதிப்புக்குள்ளானவர்கள் சிறிய விவசாயிகளே பெரும் பண்ணைக்குச் சொந்தக்காரர்கள் அரசாங்கத்தின் வலையில் இருந்து எப்படியும் தப்பித்து விடுவார்கள். சிறு விவசாயிகளின் நிலங்களை ஆர்ஜிதம் செய்யும்போது அரசு போதுமான ஈட்டுத் தொகையும் வழங்குவதில்லை. எனவே பாதிக்கப்படுகின்ற விவசாயிகள் கிடைக்கின்ற சிறிய அளவு ஈட்டுத் தொகையினால் வேறு நிலம் வாங்க இயலாமல் விரக்தி அடைந்தவர்களாகி வேறு தொழிலுக்கோ கூலி வேலைக்கோ செல்கின்றனர்.

ஆண்டுதோறும் லட்சக் கணக்கான விவசாயிகள் இவ்வாறு நிலத்தை இழந்தவர்களாக வேறு தொழிலுக்குச் சென்று கொண்டிருப்பது நாட்டின் எதிர்காலத்திற்கே ஆபத்து என்பதை சுட்டிக் காட்ட விரும்புகின்றேன்.

மகாத்மாகாந்தியடிகள்இந்திய துணைக்கண்டம் தழைத்தோங்க வேண்டுமானால் ராமராஜ்யம் வேரூன்ற வேண்டுமென்றார். இந்தியா தலைநிமிர்ந்து நடக்க வேண்டுமேயானால் கிராமப்புற மக்கள் செழிப்புடன் இருக்கவேண்டும் என்றார்.

ஆனால் இங்கே நடப்பது நேருக்குமாறானது எனவே அரசு சிறுவிவசாயிகளிடம் இருந்து நிலத்தை எடுக்கும் பொழுது அவ்விவசாயிகள் வேறு தொழிலுக்கும் போகாமல் இருக்குமாறு பார்த்துக் கொள்ளவேண்டும்.

அவர்களிடம் இருந்து எடுத்துக்கொண்ட நிலத்திற்குஈடாகவேறு இடத்தில் அரசு நிலம் வாங்கிக் கொடுப்பதுடன் அவர்கள் விவசாயம் செய்யப் போதிய பணமும் கொடுக்க முன் வருதல் வேண்டும் இல்லை யென்றால் விவசாய வர்க்கம் இந்த அரசை மட்டுமல்ல, சமூகத்தையே தனது எதிரியாகி நினைக்க வேண்டிய சூழ்நிலை உருவாகும். இந்த நேரத்தில் மாண்புமிகு தமிழக முதல்வர் டாக்டர் எம். ஜி. ஆர். அவர்கள் ஆட்சியிலே தமிழக விவசாயிகளும் கிராமப் புற மக்களும் எவ்வாறு பயன் பெறுகிறார்கள் என்பதைச் சுட்டிக் காட்ட விரும்புகின்றேன்.

மகாத்மா காந்தியடிகளின் கனவானராமராஜ்யம் இன்று தமிழகத்திலேதான் உருவாகியுள்ளது. பேரறிஞர் அண்ணா அவர்கள் 'உழுபவனுக்கே நிலம் சொந்தம்' என்று கூறினார் அதனைப் பின் பின்பற்றிநிலமற்றவர்களுக்கு தரிசு நிலமும், அதைச் செம்மைப்படுத்தப் போதிய பணமும் தமிழக அரசு கொடுத்து வருகின்றது.

விவசாயிகளை சிறுவிவசாயிகள் மிகச்சிறு விவசாயிகள் என்று பிரித்து தரத்திற்கேற்ப வண்டிமாடு வாங்கவும் சாகுபடி செய்யவும் குறைந்த வட்டியில் கடன் வழங்கி வருகின்றது இரண்டு ஏக்கர் நிலத்திற்கு உற்பட்ட சிறுவிவசாயிகள் நீர் இரைக்கப் பயன்படுத்தும் மின்சார மோட்டார்களுக்கு இலவச மின்சாரம் வழங்குகின்றது.

இப்படி ஒரு மாநில அரசு செய்யும் போது மத்தியஅரசு ஏன் இது போன்ற காரியங்களைச் செய்யக் கூடாது என்பதைத்தான் நான் சுட்டி காட்ட விரும்புகிறேன்.

இனியும் தாமதம் இல்லாமல் நாராயணராவ்தேஷ்முக் கூறியுள்ளபடி நகர்ப்புற நில உச்சவரம்புமற்றும்சீரமைப்பு சட்டத்தை உடனடியாக மாற்றி அமைக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கின்றேன்

அத்துடன் காலான்கள் போன்று தோன்றி வருகின்ற வீட்டுமனைத்தரகர்களினால் லஞ்சமும் ஊழலும் பெருகி வருகின்றது இதனால்கிராமப் புறத்திலும் நகர்ப்புறத்திலும் பாமர மக்களுக்கு எட்டாத அளவு நிலத்தின் விலை உயர்ந்து கொண்டே செல்கிறதுஇந்தப்போக்கை தடுக்க அரசு ஆவணசெய்யவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறு கம்பம் கோபாலன் பேசினார்.

# சொந்த வீடு கட்ட கடன்: அரசு நிதி ஒதுக்கீடு

நாகர்கோவில், டிச. 6-
சொந்த வீடு கட்ட கூட்டுறவு சங்கங்கள் கடன் கொடுக்கின்றன இதற்காக ரூபாய் 5 கோடி ஒதுக்கப் பட்டுள்ளது என்று தமிழ் நாடு கூட்டுறவு வீட்டு வசதி சங்க சிறப்பு அதிகாரி கிருஷ்ணசாமி தெரிவித்தார்.

நெல்லை, குமாரி, சிதம்பரனார் மாவட்ட கூட்டுறவு வீட்டுவசதி சங்கத்தலைவர் களின் மாநாடு நாகர்கோவிலில் நடைபெற்றது.

நெல்லை மண்டல கூட்டுறவு வீட்டுவசதி சங்கங்களின் பதிவாளர் சையதுமுகமது தலைமை வகித்தார்.

தமிழ்நாடு கூட்டுறவு வீட்டு வசதி சங்க சிறப்பு அதிகாரி கிருஷ்ணசாமி இந்த மாநாட்டில் கலந்து கொண்டு பேசும் போது கூறியதாவது:-

1987, ஆம்ஆண்டை வீட்டு வசதி ஆண்டு என்று கொண்டாடுகிறோம்.

இந்த ஆண்டில் கூட்டுறவு வீட்டுவசதி சங்கங்கள் மூலம் சொந்த வீடு கட்டிக் கொள்பவர்களுக்குகடன்வழங்குவதில் சிறிதுதாமதம்ஏற்பட்டு இருக்கிறது.

ஏற்கனவே மனு செய்து கடன் அனுமதிக்கப்பட்டவர்களுக்கு கூட கடன்வழங்க இயலாத நிலை ஏற்பட்டது.

இதற்கு காரணம் ஆயுள் காப்பீட்டுக் கழகத்திலிருந்து கடன் கிடைப்பதில் தாமதம் ஏற்பட்டு இருப்பது தான்.

ஆனாலும் வீடுகட்டும்பணி தொடர்ந்து நடக்க வேண்டும் தடைப்படகூடாது இதற்கு வசதியாக மாநில கூட்டுறவு வங்கியிடம் ரூபாய் 5 கோடி கடன் வாங்கியிருக்கிறோம்.

இந்த ரூபாய் 5 கோடி தமிழ்நாடு முழுவதும் உள்ள கூட்டுறவு வீட்டுவசதி சங்கங்களுக்கு அனுப்பப்படும் ஏற்கனவே ரூபாய் 3 கோடி வரை அனுப்பிவிட்டோம். மீதி பணமும் விரைவில் அனுப்பப்படும்.

எனவேசொந்தவீடு கட்டிக் கொள்ள விரும்புபவர்களுக்கு இனி கூட்டுறவு வீட்டு வசதி சங்கத்தில் கடன் பெறுவதில் சிரமம் இருக்காது தாமதமும் ஏற்படாது.

ஏற்கனவே கடன் அனுமதிக்கப்பட்டவர்களுக்கு உடனடியாகப்பணம்கிடைக்கும் புதிய மனுக்களும் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்படும்.

இதன் மூலம் தமிழ் நாட்டில் வீடுகட்டும் வேலைகள் மீண்டும் விறுவிறுப்பு அடையும் என்று எதிர்பார்க்கிறோம்.

இவ்வாறு சிறப்பு அதிகாரி கிருஷ்ணசாமி கூறினார்.

# சனோலா எண்ணெய் ஆலை திடீர்சோதனை

சென்னை, டிச. 6-
தர்மபுரி மாவட்டத்தில் உள்ள சூரிய காந்தி எண்ணெய் நிரப்பும் ஆலையில் அக்ரோ தலைவர் ராஜேந்திரன் திடீர் சோதனை நடத்தினார்.

தர்மபுரி மாவட்டம் போச்சம்பள்ளியில் சூரியகாந்தி எண்ணெயை அக்ரோ நிறுவனம் தயாரித்து வருகிறது, இங்கு தயாரிக்கப்படும் எண்ணெயை பெரியபாரல்களில் நிரப்பி சென்னைக்கு அனுப்பப்படுகிறது. இங்கு அது பிளாஸ்டிக் பாட்டில்களில் நிரப்பப்பட்டு விற்பனைக்கு அனுப்பப்படுகிறது.

## திடீர் சோதனை

இந்த பிரிவினை அக்ரோ தலைவர் ராஜேந்திரன் திடீர் சோதனை நடத்தினார்.

அங்கு நிரப்பி வைக்கப்பட்டிருந்த எண்ணெய் கேன்கள் மற்றும் இருப்புகளையும் சரி பார்த்தார்.

எண்ணெயின் அளவுகள் சரியாக உள்ளதா என்று எடைபோட்டு பார்த்தார்

பின்னர் அந்த ஆலையில் வேலை பார்க்கும் தொழிலாளர்களிடம் குறைகளை கேட்டறிந்தார்.

இந்த திடீர் சோதனையின் போது ரசாயன ஆய்வாளர் முத்து ஸ்டோர் அலுவலர் சந்திரசேகர் ஆகியோர் உடனிருந்தனர்.

## விபத்து: இருவர் சாவு

சென்னை, டிச. 6-
சென்னை நகரில் நடந்த இரண்டு விபத்துக்களில் இருவர் இறந்தனர்.

வியாசர்பாடியைச் சேர்ந்த ராஜேந்திரன் [வயது 23] புளியந்தோப்புஅருகே சால்ட் குவார்ட்டர்ஸ் பகுதியில் நடந்து சென்று கொண்டிருந்த போது லாரி மோதி ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டு இறந்தார்

தேனாம் பேட்டையில் கண்ணம்மா என்பவர் பஸ் மோதியதால் இறந்தார்.

## குளிர்தாளாமல் பஸ்சிலேயே மரணம்

சென்னை, டிச. 6
கடந்தசிலநாட்களாகபெய்து வரும் மழையின் காரணமாக ஒருவர் மரணமடைந்தார், 3பேருக்குகாயம் ஏற்பட்டது.

பூந்தமல்லிக்கு பஸ்சில் ஏறிய 70 வயதுமதிக்கத்தக்க ஒருவர் குளிர் காரணமாக பஸ்சிலேயே நடுங்கி உயிரிழந்தார் இது குறித்துபூந்தமல்லி போலீசார் விசாரணை நடத்தி வருகின்றனர்

அமைந்தகரையில் ஒரு வீட்டின் சுவர் இடிந்து விழுந்ததில் மீனாட்சி (வயது 37) என்ற பெண் படுகாயமடைந்தார் சேத்துப்பட்டு ரயில் நிலையம் அருகில் மண் ்தாண்டிய போது மின்சாரம் பாய்ந்து செல்வராஜ் (வயது22) என்பவரும் மழையில் நடந்து வந்த போது தண்ணீரில் மின்சாரம் பாய்ந்ததால் யாகவல்லி (வயது29) என்ற பெண்ணும் காயமடைந்தார் இந்த 3 பேரும்கீழ்ப்பாக்கம் மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டு சிகிச்சையளிக்கப்படுகிறது.

### இங்கல்ல... மலேசியாவில்

# பொய்செய்தி: 3 வருட சிறை தண்டனை

கோலாலம்பூர், டிச. 6-
பொய்ச்செய்தி வெளியிடும் பத்திரிகை ஆசிரியருக்கு 3 ஆண்டுவரை சிறைத் தண்டனையும் ரூபாய் ஒரு லட்சம் வரை அபராதமும் விதிக்க மலேசியாவில் சட்டம் இயற்றப்பட்டது.

அவதூறாகவும்பொய்யாகவும் செய்தி வெளியிடும் ஏடுகளுக்கு மேற்கூறிய அளவில் தண்டனை விதிப்பதற்கான சட்டத்தைமலேசிய பிரதமர் மகாதிர்முகமதுகொண்டு வந்தார்.

மலேசியாவில் 106 முக்கிய பிரமுகர்கள் உள்நாட்டுபாதுகாப்பு சட்டப்படி கைது செய்யப்பட்டுள்ளனர்; வழக்கு இல்லாமல் அவர்களை காலவரம்பின்றி காவலில் வைக்க உள்நாட்டு சட்டம் வகை செய்கிறது.

இதைத் தொடர்ந்து பொய்ச்செய்தி வெளியிடும் ஏட்டாளர்களுக்கு கடும் தண்டனைகொடுக்க சட்டம் இயற்றப்பட்டுள்ளது,

## கண்டனம்

மலேசியாவில் முக்கிய பிரமுகர்கள் 106 பேர் கைது செய்யப்பட்டுள்ளதை பம்பாய் பத்திரிகையாளர்கள் கண்டித்துள்ளனர்.

பினாங்கு வக்கீல்கள் சங்க தலைவி செல்வி மீனாட்சி ராமன் தொழிற் சங்க தலைவர் ஆரோக்கியதாஸ் ஆகியோர் கைதானவர்களில்அடங்குவர்

கைது செய்யப்பட்டவர்களை உடனே விடுதலை செய்ய வேண்டும் அல்லது ஆதாரம் இருந்தால் வழக்கு தொடரவேண்டும் என்று பம்பாய் பத்திரிகையாளர்கள் சங்கம் கேட்டுக்கொண்டுள்ளது.

## கொடி நாள்: நிதியமைச்சர் டாக்டர் நாவலர் வானொலி பேச்சு

சென்னை, டிச. 6-
'கொடிநாள்' சிறப்புகுறித்து நிதியமைச்சர் டாக்டர் நாவலர் நாளை (7-ந்தேதி) காலை 7மணிக்கு வானொலியில் பேசுகிறார். அன்று இரவு 8.25மணிக்குதொலைகாட்சியிலும் பேசுகிறார்.

## திருமணம்

சென்னை வடபழனியைச் சேர்ந்த பழம்பெரும் நாடக சினிமா நடிகர் ஆறுமுகத்தின் மகள் கலைச்செல்விக்கும் சிவதாணு பாரதிக்கும்நாளை [7 ந் தேதி]காலை 9 மணிக்கு வடபழனி சன்னதி தெரு ஜெயின் திருமண மண்டபத்தில் அமைச்சர் ஆர். எம், வீ. தலைமையில் மணவிழா நடைபொறுகிறது கழக துணைப் பொதுச் செயலாளர் டாக்டர் ஹண்டே நடிகமணி டி வி நாராயணசாமி வீட்டுவசதி வாரியத்தலைவர் திருப்பூர் மணிமாறன் ஆகியோர் வாழ்த்துகின்றனர்.

## சபரிமலைக்கு விசேஷ பஸ்கள்

சென்னை டிச, 6-
திருவள்ளுவர் போக்குவரத்து கழகம் கடந்த 4-ந் தேதியிலிருந்து சபரிமலை பக்தர்கள் வசதிக்காக தினமும் விசேஷ பஸ்களை இயக்கி வருகிறது. சபரிமலை செல்ல செங்கோட்டை, மதுரை, கன்னியாகுமரி ஆகிய இடங்களில் இருந்து இந்த பஸ்கள் புறப்படும்.

மேலும் திருவள்ளுவர் போக்குவரத்துக் கழகம் இரண்டு புதிய பஸ்களை சென்னையிலிருந்து சிவகாசிக்கும், பெங்களூருக்கும் இயக்கும் என்று தெரிவிக்கப் பட்டுள்ளது.

## சுற்றுப்புற சூழலை காப்பதுஎப்படி?

சென்னை, டிச. 6-
சுற்றுப்புற சூழலை நல்ல முறையில் வைத்திருப்பது குறித்த கண்காட்சி சென்னையில் துவங்கப்பட்டுள்ளது.

''சாலிடாரிட்டி சுற்றுச் சூழல் குழு'' என்றஅமைப்பின் சார்பிலான இந்த கண்காட்சி சூளைமேடு வேணுகோபால் மெட்ரிக்குலேசன் பள்ளியில் நடக்கிறது.

சென்னையில் உள்ள பல்வேறு பள்ளி,கல்லூரி மாணவ மாணவிகள் பங்கு பெற்ற இந்த கண்காட்சியை லயோலா கல்லூரியின் பூச்சியியல் ஆராய்ச்சித் துறை இயக்குநர் டி.என். அனந்த கிருஷ்ணன் துவக்கி வைத்தார்.

திங்கள் கிழமைவரை இந்த கண்காட்சி நடைபெறுகிறது. சுற்றுப்புற சூழல் பாதுகாப்பு பற்றிய விழிப்புணர்வை மக்களிடம் ஏற்படுத்தும் நோக்குடன் இந்த கண்காட்சி அமைக்கப்பட்டுள்ளது

கண்காட்சி துவக்கவிழாவுக்கு பின் பள்ளி மாணவர்களுக்கான பேச்சு போட்டி நடைபெற்றது.

நாளை காலை கல்லூரி மாணவர்களுக்கான பேச்சுப் போட்டியும் பிற்பகலில் வினாடி வினா' முதல் சுற்று நிகழ்ச்சியும்நடைபெறுகிறது.

போட்டிகளில் வெற்றி பெறும் மாணவ மாணவிகளுக்கும் பள்ளி, கல்லூரிகளுக்கும் பரிசுகள் வழங்கப்படுகின்றன போட்டிகளுக்கு அழகப்பா தொழில் நுட்பக் கல்லூரியின் ஜியாலஜி துறை பேராசிரியர் எஸ்,சி.ஜேக்கப் நடுவராக இருப்பார்.

**தலைமைக் கழக அறிவிப்பு**

இதயதெய்வம்

# புரட்சித்தலைவர் பிறந்தநாள் விழா

மற்றும்

புரட்சித்தலைவர் தமிழகத்தின் முதல்வராக ஆட்சிப் பொறுப்பினை ஏற்று 10 ஆண்டுகள் நிறைவுபெற்று முதல்வர் புரட்சித்தலைவர் தலைமையில் அமைந்த கழக அரசு பதினொன்றாம் ஆண்டில் வெற்றிகரமாக ஆட்சி நடத்தி வருவதையொட்டி பொற்கால ஆட்சி படைத்த புரட்சித்தலைவர் அரசு இதுவரை ஆற்றிய அரும்பெரும் பணிகள் பற்றிய

## சாதனை விளக்க பொதுக்கூட்டங்கள்

### 22-12-1987 செவ்வாய்க்கிழமை

வாலாஜாபாத் பேரூராட்சி
செங்கை மாவட்டம்
சிறப்புரை
மாண்புமிகு அமைச்சர்
திரு. கே. கே. எஸ். எஸ். ஆர். இராமச்சந்திரன் அவர்கள்
திரு. ஆர். எஸ். முனிரத்தினம் எம்.எல்.ஏ. அவர்கள்
செங்கை மாவட்ட கழகச் செயலாளர்
திரு. எஸ். ஜெகத்ரட்சகன் எம். பி. அவர்கள்
திரு. க. நரசிம்மபல்லவன் எம்.எல்.ஏ. அவர்கள்
உத்திரமேரூர் தொகுதி சட்டமன்ற உறுப்பினர்
திரு. காஞ்சி பன்னீர் செல்வம் அவர்கள்
செங்கை மாவட்ட எம். ஜி. ஆர். மன்றச் செயலாளர்
கூட்ட ஏற்பாடு
திரு. பி. கணேசன் அவர்கள்
வாலாஜாபாத் பேரூராட்சி கழகச் செயலாளர்

### 22-12-1987 செவ்வாய்க்கிழமை

ஆலங்குளம்
திருநெல்வேலி கட்டபொம்மன் மாவட்டம்
சிறப்புரை
டாக்டர் கோ. சமரசம் எம்.எல்.ஏ. அவர்கள்
அனைத்துலக எம். ஜி. ஆர். மன்ற பொதுச்செயலாளர்
திரு. வீ. கருப்பசாமிபாண்டியன் அவர்கள்
திருநெல்வேலி கட்டபொம்மன் மாவட்ட கழகச் செயலாளர்
திரு. மு. சண்முகையா பாண்டியன் எம்.எல்.ஏ. அவர்கள்
திரு. கோ. முத்துராமலிங்கம் அவர்கள்
திருநெல்வேலி கட்டபொம்மன் மாவட்ட மாணவர் அணி அமைப்பாளர்
கூட்ட ஏற்பாடு
திரு. எஸ். இசக்கிபாண்டி அவர்கள்
மாணவர் அணி
மற்றும்
ஆலங்குளம் ஒன்றிய அனைத்திந்தியஅண்ணா தி.மு.கழகம்

### 23-12-1987 புதன்கிழமை

சங்கரன்கோவில்
திருநெல்வேலி கட்டபொம்மன் மாவட்டம்
சிறப்புரை
டாக்டர் கோ. சமரசம் எம்.எல்.ஏ. அவர்கள்
அனைத்துலக எம்.ஜி.ஆர். மன்ற பொதுச்செயலாளர்
திரு. வீ. கருப்பசாமி பாண்டியன் அவர்கள்
திருநெல்வேலி கட்டபொம்மன் மாவட்ட கழகச்செயலாளர்
திரு. எஸ். சங்கரலிங்கம் எம்.எல்.ஏ. அவர்கள்
திரு கோ முத்துராமலிங்கம் அவர்கள்
திருநெல்வேலி கட்டபொம்மன் மாவட்ட மாணவர் அணி அமைப்பாளர்
கூட்ட ஏற்பாடு
திரு. சோலை இரா. கண்ணன் அவர்கள்
மாணவர் அணி
மற்றும்
சங்கரன்கோவில் ஒன்றிய அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம்

### 24-12-1987 வியாழக்கிழமை

தச்சநல்லூர்
திருநெல்வேலி கட்டபொம்மன் மாவட்டம்
சிறப்புரை
டாக்டர். கோ. சமரசம் எம்.எல்.ஏ. அவர்கள்
அனைத்துலக எம்.ஜி ஆர். மன்ற பொதுச்செயலாளர்
திரு. வீ. கருப்பசாமி பாண்டியன் அவர்கள்
திருநெல்வேலிகட்டபொம்மன் மாவட்ட கழகச்செயலாளர்
திரு. மு. ஆதம் அவர்கள்
திருநெல்வேலி நகரமன்றத்தலைவர்
திரு. மு. பாலகிருஷ்ணன் அவர்கள்
திருநெல்வேலி கட்டபொம்மன் மாவட்ட எம்.ஜி.ஆர். மன்றச் செயலாளர்
கூட்ட எற்பாடு
திரு: கோ. முத்துராமலிங்கம் அவர்கள்
திருநெல்வேலி கட்டபொம்மன் மாவட்ட மாணவர் அணி அமைப்பாளர்
மற்றும்
தச்சநல்லூர் பேரூராட்சி அனைத்திந்திய அண்ணா தி.மு. கழகம்

**ஜெயலலிதா எம். பி**
கொள்கைபரப்புச் செயலாளா
அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம்

சென்னை-14
6-12-1987

# நீலகிரி, அண்ணா மாவட்ட எம். ஜி. ஆர். இளைஞர் அணியினர் கவனத்திற்கு

நீலகிரி - அண்ணா மாவட்ட ஒன்றிய - நகர எம். ஜி, ஆர். இளைஞர் அணி நிர்வாகிகள் மற்றும் செயல் வீரர்கள் ஆலோசனைக் கூட்டம் கீழ்க்கண்டவாறு நடைபெறுகிறது.

நீலகிரி மாவட்டம்
16-12-87 புதன் மாலை 2 மணி குன்னூர்
அண்ணா மாவட்டம்
19-12-87 சனி மாலை 2 மணி திண்டுக்கல்

எம். ஜி. ஆர். இளைஞர் அணி நிர்வாகிகள் மற்றும் செயல்வீரர்கள் கூட்டத்தில் தவறாமல் பங்கேற்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.

இவண்

**ஜே. சி. டி. பிரபாகரன்**
செயலாளர்
எம் ஜி ஆர். இளைஞர் அணி
அனைத்திந்திய அண்ணா தி மு. கழகம்

சென்னை-14
6-12-87

காரைக்காலுக்கு 50 கி. மீ. தூரத்தில்

# கடும் புயல் சின்னம்: தமிழகத்தில் பலத்த மழை

சென்னை, டிச. 6- வங்காள விரிகுடாவில் உருவான காற்று அழுத்த மண்டலம் காரைக்கால் அருகே 50 கி.மீ. தூரத்தில் கடலில் மையம் கொண்டுள்ளது இதனால் தமிழ்நாட்டில் பல்வேறு பகுதிகளில் பலத்த மழை பெய்தது.

வங்காள விரிகுடாவில் நாகப்பட்டிணத்துக்கு தென் கிழக்கே புயல் சின்னம் உருவாகியிருந்தது.

இதன் காரணமாக சென்னையிலும் மற்றும் தமிழக கடலோரப்பகுதிகளிலும் கடந்த 3 நாட்களாக பலத்தமழை பெய்தது.

தற்போது அந்த புயல் சின்னம் காரைக்கால் அருகே 50 கிமீட்டர் தூரத்தில் கடலில் மையம் கொண்டுள்ளது.

இன்று அதிகாலையில் அது கரையைக் கடக்கும் என்று வானிலை ஆராய்ச்சி நிபுணர்கள் தெரிவித்தனர்.

தஞ்சை மாவட்டத்தில் கடற்கரை பகுதிகளிலும் காரைக்கால் பகுதிகளிலும் நேற்று முழுவதும் பலத்த காற்றுடன் மழை பெய்தது.

நாகப்பட்டிணத்தில் தொடர்ந்து 2 ம் நாளாக மழை பெய்ததை யொட்டி தாழ்வான பகுதியில் வாழும் மக்கள் அங்கிருந்து வெளியேற்றப்பட்டு மேடான பகுதிகளுக்கு அழைத்துச் செல்லப்பட்டனர்.

நாகை, காரைக்கால் பகுதிகளில் கடலின் கொந்தளிப்பு அதிகமாக இருந்தது 50 அடி உயரத்திற்கு ராட்சத அலைகள் எழுந்தன. இதனால் மீனவர்கள்யாரும் மீன் பிடிக்கசெல்லவில்லை.

## பலத்த மழை

பலத்த மழை காரணமாக பல இடங்களில் மரங்கள் வேரோடு சாய்ந்தன.

புயல் எதிரொலியாக இன்னும் 36 மணி நேரத்துக்கு பலத்த மழை பெய்யக்கூடும் என்று வானிலை ஆராய்ச்சி நிலையத்தினர் தெரிவித்துள்ளனர்.

தஞ்சை மாவட்டம் முழுவதும் பெய்த மழையின் அளவு விவரம் வருமாறு:-

கொள்ளிடம் -7 அங்குலம்
பொறையாறு- 5 அங்குலம்
சீர்காழி - 5 அங்குலம்
நாகை-4 அங்குலம்
மயிலாடுதுறை-3 அங்குலம்
நன்னிலம் - 3 அங்குலம்
வேதாரண்யம்-3 அங்குலம்
அணைக்கரை-2.5 அங்குலம்
குடவாசல் - 2 அங்குலம்
பாபநாசம்-2 அங்குலம்
மன்னார்குடி-1.5 அங்குலம்
கும்பகோணம் 1-5 அங்குலம்
திருவையாறு 1 அங்குலம்

மூன்றாவது நாளாக தஞ்சை 1 அங்குலம்

சென்னை நகரில் நேற்று தொடர்ந்து மழை பெய்தது இதனால் சென்னைக்கு குடிநீர் வழங்கும் ஏரிகளின் நீர் மட்டம் ஓரளவு உயர்ந்துள்ளது,

கடலூரிலும்தென் ஆற்காடு மாவட்டத்திலும் பலத்த மழைகாரணமாக பல இடங்களில்மரங்கள்சாய்ந்தனதெரு விளக்கு கம்பங்களும் சாய்ந்தன.

புதுவையில் 3-வதுநாளாக தொடர்ந்து மழை பெய்தது. இதனால் புதுவை துறைமுகத்தில் 3வது புயல் சின்னம் ஏற்றப்பட்டது.

லால்பேட்டை பகுதியில் உள்ள வீராணம் ஏரி நிரம்பி அது உடையும் அபாயம் ஏற்பட்டுள்ளது. விராணம் ஏரியை சிதம்பரம்உதவி ஆட்சித்தலைவர் சுப்பிரமணியம் பார்வையிட்டார்

ஏரிக்கரை ஓரம் உள்ள குடிசைகளில் வசிப்பவர்களை மேடான பகுதிக்குச் செல்லுமாறு வேண்டுகோள் விடப்பட்டுள்ளது.

குடியரசு நாளில் கறுப்பு சின்னமா?

# கருணாநிதியின் தேச விரோத செயல்: காங்கிரஸ் கண்டனம்

சென்னை, டிச. 6- புனித நாளான குடியரசு நாளில் கறுப்பு சின்னம் அணியச்சொல்லும்கருணாநிதியின் செயல் தேச விரோத செயலாகும்என்று தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் பழனியாண்டி கண்டித்துள்ளார்,

பழனியாண்டி விடுத்துள்ள அறிக்கைவருமாறு:-

இந்திய குடியரசு தினத்தன்று கறுப்பு சின்னம் அணிய வேண்டுமென்று தி.மு.க. தலைவர் கருணாநிதி வேண்டுகோள் விடுத்திருப்பது கண்டு வேதனைப்படுகிறேன்,

ஈழத் தமிழர்களை காட்டி கொடுத்து இனப் படுகொலைக்கு உடந்தையாக இருப்பவர் என பிரதமர் ராஜீவ்காந்தியை அவர் வர்ணித்திருப்பது நமது நெஞ்சங்களை கொதிப்படையச் செய்கிறது.

இலங்கையில் வாழும் தமிழர்களின் நலனை பாதுகாக்க பிரதமர் ராஜீவ் காந்தி எடுத்து வந்துள்ள நடவடிக்கைகளை நன்றியுள்ள தமிழர் யாரும் மறந்துவிட முடியாது.

யாழ்ப்பாணம் பகுதியில் சிங்கள ராணுவம் கண்மூடித்தனமான தாக்குதல் நடத்தி வந்ததுடன் பொருளாதார முற்றுகையிட்டு தமிழ் மக்களுக்கு உணவும் மற்றும் அத்தியாவசிய பொருள்களும் கிடைக்காமல் அவதிப்பட்ட நேரத்தில் தமிழ் மக்களின் துயர் துடைப்பதில் அவருக்கிருந்த அக்கறையின் காரணமாகவே விமானங்களின்மூலம்உணவுப்பொருட்களை அனுப்பி வைத்த ராஜீவ் காந்தியா தமிழர்களை காட்டிக்கொடுப்பவர்?

இலங்கையின் பிரதமர் பிரேமதாசா வெளிநாட்டு அமைச்சர் அதுலத்முதலி போன்றவர்களின் எதிர்ப்புகளை பொருட்படுத்தாது தமிழர்களின் நலன் ஒன்றையே கருத்தில் கொண்டு தன்னுயிரை பணயம் வைத்து கொழும்பு சென்று இந்திய இலங்கை ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டு வந்த ராஜீவ் காந்தியா இனப்படுகொலைக்கு உடந்தையாக இருப்பவர்?

கருணாநிதி இப்படி கீழ்த்தரமாக இறங்கி விமர்சனம் செய்திருப்பது அவர்தொட்டதெல்லாம் தோல்வியாகப் போகின்றது என்கிற விரக்தியில் பேசுகின்ற பேச்சாகவே கருத முடிகிறது.

இந்திய அமைதிப்படையை இலங்கைக்கு அனுப்பி ஒப்பந்தத்தை சரியாக அமல் நடத்துவதின் மூலம் தமிழர்கள் வாழும் பகுதிகளில் அமைதியை ஏற்படுத்தி அவர்களுக்கு ஒளிமிக்க வாழ்வைஏற்படுத்திக்கொடுப்பதே இலட்சியம் என ராஜீவ் காந்தி செயல்பட்டு வருகின்றார்.

இதனை இந்திய மக்கள் குறிப்பாக தமிழக மக்கள் உணர்ந்தே இருக்கிறார்கள்.

## விவேகமான செயல்

முழு நிலவின் ஒளிக்கதிரை சில கறுப்பு துண்டுகளால் மறைத்துவிட முடியாது ஒவ்வொரு ஆண்டும்குடியரசு தினத்தன்று வெளிநாட்டு பிரமுகர்களை சிறப்பு விருந்தினராகஅழைப்பது வழக்கமான சம்பிரதாயமாகும். இந்த ஆண்டு இலங்கை அதிபர் ஜெயவர்த்தனேவை அழைத்திருப்பது பொருத்தமானது மட்டுமல்ல விவேகமான செயலாகும்.

இலங்கையில் தமிழ் மொழியை ஆட்சிமொழியாக்கிடவும் தமிழ் மக்களுக்காக தனி மாநிலம் அமைக்கவும் ஒப்புக்கொண்ட ஜெயவர்த்தனேவைக் கொண்டே தமிழர்களின் நலனுக்காக செய்ய வேண்டிய மற்ற விஷயங்களைக் குறித்து நேரடியாக பேசி முடிவு காண இது ஒரு அரிய சந்தர்ப்பமாகும், இதனை நழுவ விடுவது அறிவுள்ள செய்கையாகாது.

இந்திய குடியரசு தினம் இந்திய குடி மக்கள் அனைவருக்கும் பொதுவான புனித தினம் அந்த திருநாளை களங்கப்படுத்துகின்ற கருணாநிதியின் நடவடிக்கை தேச விரோத செய்கையாகும் அவரது செயலை வன்மையுடன் கண்டிக்கிறேன்.

இந்தபோக்கு நீடிக்குமானால் தேசபக்த சக்திகள் அனைவரும் ஒன்றுதிரண்டு அவரது முயற்சியைமுறியடிப்பார்கள் என எச்சரிக்கிறேன்.

இவ்வாறு பழனியாண்டி அந்த அறிக்கையில் கூறியுள்ளார்.

## மோசடி: இருவர் கைது

மதுரை, டிச, 6- மதுரை கரிசல் குளம் விளாங்குடியைச் சேர்ந்தவர் சுப்பிரமணிய முதலியார் இவர் ரூபாய் இரட்டிப்பு மோசடியில் ஈடுபட்டு வந்தாராம்.

காமராசர் மாவட்டம் சாத்தூரைச் சேர்ந்த கிருஷ்ணசாமி என்ற சோப்பு வியாபாரியிடம் சுப்பிரமணிய முதலியாரும், அவரது கூட்டாளி ஷேக்முகமதுவும் 35 ஆயிரம் ரூபாய் மோசடி செய்தனராம்.

சுப்பிரமணிய முதலியார் இதுபோன்ற பணஇரட்டிப்பு மோசடியை சென்னை, திருச்சி போன்ற இடங்களிலும் நடத்தி உள்ளாராம்.

இது தொடர்பாக இருவர் கைது செய்யப்பட்டனர்.

## பஸ் விபத்து: பயணிகளுக்கு நஷ்டஈடு

திருநெல்வேலி, டிச.6 தக்கர்மால்புரம் என்ற இடத்தில் கட்டபொம்மன் போக்குவரத்துக் கழக பஸ் ஒன்றும் அலகாபாத்தைச் சேர்ந்த அஷர்பிஹால் ஜெய்ஸ்வால் என்பவருக்கு சொந்தமான சுற்றுலா பஸ் ஒன்றும் மோதியதில் இறந்தஇரண்டுபயணிகளுக்கு தலா ஒரு லட்சம் வழங்க திருநெல்வேலி முதன்மைத் துணை நீதிபதி சி.முருகேசன் தீர்ப்பு வழங்கினார்.

பஸ் விபத்தில் இறந்த பயணிகளின் உறவினர்கள் இந்த வழக்குகளைதொடர்ந்திருந்தனர். பாதிக்கப்பட்ட அனைவருக்காகவும் ஒட்டு மொத்தமாகரூபாய் 13 லட்சம் வழங்க நீதிபதி உத்தரவிட்டார்,

அஷர்பிஹால் ஜெய்ஸ்வாலும் இன்சூரன்ஸ் நிறுவனமும் நட்ட ஈடு தொகையோர்டுமனுதாக்கலான 1982-ம் ஆண்டு ஆகஸ்டு25-ந்தேதியிலிருந்து நஷ்ட ஈடு தொகைக்கு 12 சதவிகித வட்டியையும் வழங்க வேண்டும் என்று நீதிபதி முருகேசன் தீர்ப்பு வழங்கினார்.

## அம்பேத்கார் நினைவு நாள்

சென்னை, டிச, 6- அண்ணல் அம்பேத்காரின் 31 வது நினைவு நாள் நாடெங்கும் கடைபிடிக்கப்பட்டது அம்பேத்கார் சிலைக்கு மாலைஅணிவிக்கப்பட்டது.

சென்னையில் உள்ள அண்ணல் அம்பேத்கார் சிலைக்கு பல்வேறு கட்சித் தலைவர்கள் மாலை அணிவித்தனர்.

## கடன் வழங்குவது தொடரும்: பூஜாரி உறுதி

பெங்களூர், டிச. 6 எதுவந்தாலும்சரிஏழைகளின் வாழ்வை உயர்த்தும் கடன் விநியோக நிகழ்ச்சிகளை தொடர்ந்து நடத்துவேன் என்று மத்திய நிதித்துறை துணை அமைச்சர் ஜனார்த்தன் பூஜாரி தெரிவித்துள்ளார்,

பெரும் சர்ச்சைக்கு உள்ளான கடன் வழங்கும் விழா பெங்களூரில் நேற்று மீண்டும் நடைபெற்றது. இதில் பங்கேற்று பேசுகையிலேயே பூஜாரி மேற்கண்டவாறு கூறினார் கட்சி பாகுபாடின்றி ஏழைகள் அனைவருக்கும் கடன் வழங்கப்படுமென்றும் அவர் கூறினார்.

## காலமானார்

சென்னை, டிச, 6- விடுதலை நிர்வாகி சம்பந்தத்தின் தாயார் பாக்கியம் அம்மாள் நேற்று மாலை இயயூகை எய்தினர் அவருக்கு 85 வயதாகிறது. அன்னாரது உடலுக்கு அமைச்சர் ராசாராம், வீரமணி ஆகியோர் மலர்வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினர்.

இறுதி ஊர்வலம் இன்று மாலை நடைபெறுகிறது. தியாகராயநகர் கண்ணம்மாபேட்டை மைதானத்தில் இறுதி சடங்குகள் நடைபெறுகின்றன.

# முதல்வர்புரட்சித்தலைவர் துவக்கிய திரைப்படம்

சென்னை; டிச. 6- முதல்வர்புரட்சித்தலைவர் இன்று (6ந்தேதி) காலை திரைப்படம் ஒன்றினை துவக்கி வைத்தார்.

அம்பிகா. ராதா சகோதரிகள் ஏ.ஆர்.எஸ். புரொடக்ஷன்ஸ் சார்பாக 'அயித்தம்' என்ற மலையாள படத்தினை எடுக்கின்றனர்.

இதன்துவக்க விழா இன்று (6ந்தேதி) காலை ஏ.வி.எம். ஆர்.ஆர்.ஒலிப் பதிவு கூடத்தில் நடை பெற்றது இந்த நிகழ்ச்சியில் முதல்வர் புரட்சித்தலைவர் பங்கேற்று புதிய படத்தை துவக்கி வைத்தார்.

இந்தநிகழ்ச்சியில்பங்கேற்க முதல்வர் புரட்சித்தலைவர் 9.40 மணிக்கு ஏ வி எம் ஆர்.ஆர். ஒலிப்பதிவு கூடத்திற்கு வந்தார் முதல்வர் புரட்சித்தலைவரை அம்பிகா ராதா சகோதரிகளும் அவர்களது தாயார் சரசம்மாவும் வரவேற்றனர்.

ஒலிப்பதிவு கூட வாசல் வரை சுமார் 200 அடி நீளத்திற்குமலர்விரிப்பு அமைக்கப்பட்டிருந்தது, அதில்புரட்சித்தலைவர் நடந்து சென்றார்.

இந்தப்படத்தில் மோகன் லால்; அம்பிகா, ராதா நெடுமுடிவேணு, சீமா, சுகுமாரன், சுகுமாரி உள்ளிட்ட பலர் நடிக்கின்றனர்

இந்தப்படத்தில் பங்கேற்கும் மோகன்லால் இயக்குநர் வேணு நாகவள்ளி ஆகியோர் முதல்வர் புரட்சித்தலைவருக்கு பட்டாடை அணிவித்து வரவேற்றனர்,

நடன இயக்குநர் புலியூர் சரோஜா முதல்வர்புரட்சித்தலைவருக்கு ஆரத்தி எடுத்துவரவேற்றார்.

பின்னர்படத்தை முதல்வர் புரட்சித்தலைவர் துவக்கி வைத்தார். பாடல் ஒலிப்பதிவையும் சிறிது நேரம் முதல்வர் கேட்டார். பின்னர் 10'05மணிக்கு அங்கிருந்து புறப்பட்டுச்சென்றார்.

இந்த நிகழ்ச்சியில் அமைச்சர்கள் ஆர். எம். வீ. விவி சுவாமிநாதன், துணை சபாநாயகர் தம்பித்துரை, டிட்கோ தலைவர்சுலோசனா சம்பத், சென்னை நகர செரீப் சரவணன், கதர்வாரிய துணைத்தலைவர் நா. காமராசன் நடிகர்கள் பிரேம்நசீர், ராஜேஷ், சத்யராஜ் ராமராஜன்.ராதாரவி.பிரபு, வி.கே. ராமசாமி, சாருஹாசன்' பாண்டியராஜன் நடிகைகள் சுகாசினி, சீமா, இயக்குநர்கள் பாரதிராஜா எஸ்.பி.முத்துராமன்,முக்தா சீனிவாசன் இசையமைப்பாளர்கள் கணேஷ் கங்கை அமரன், பட அதிபர் கே.ஆர்.ஜி. கவிஞர்கள் புலமைப்பித்தன்,வைரமுத்து கழக தோழர்கள் கு.க.செல்வம் தியாகராயநகர் மூர்த்தி சந்திரசேகரராஜா உள்ளிட்ட பலரும் பங்கேற்றனர்.

## அழகி போட்டி: பெண்கள் போராட்டம்

ஔரங்காபாத், டிச. 6- மகாராஷ்டிரத்தில் அழகிப் போட்டிக்கு எதிராககிளர்ச்சி செய்த 50 பெண்கள் கைது செய்யப்பட்டனர் ஔரங்காபாத்தில் நேற்று இச்சம்பவம் நடந்துள்ளது.

குளிர்பானம் தயாரிக்கும் நிறுவனம் ஒன்று இப்போட்டியை நடத்தியது ஒரு மகளிர் அமைப்பைச் சேர்ந்த பெண்கள் ஆர்ப்பாட்டத்தை நடத்தினர்.

## புதுக்கோட்டை மாவட்ட கழக ஆலோசனைக் கூட்டம்

12-12-87 சனிக்கிழமை காலை 10 மணியளவில் புதுக்கோட்டை ஹோட்டல் விஜய்யில் மாவட்ட அவைத்தலைவர் சி. அன்பரசன் தலைமையில் மாவட்ட கழக உறுப்பினர்களின் கூட்டம் நடைபெறவிருக்கிறது. இந்தக்கூட்டத்தில் மாவட்ட கழக உறுப்பினர்களும் சிறப்பு அழைப்பாளர்களும் கலந்துகொண்டு சிறப்பித்துத்தரும்படி கேட்டுக் கொள்கிறேன்.

எஸ். ரகுபதி
மாவட்ட செயலாளர்
புதுக்கோட்டை

## காவிரி மினி பம்பர்

சிறப்புக் குலுக்கல் முடிவுகள்

5-வது காவேரி மினி பம்பர் குலுக்கல் முடிவுகள்

நாள்: 4-12-1987

இடம்: மீனாட்சி கல்யாண மண்டபம்
திருவண்ணாமலை
வடாற்காடு மாவட்டம்

முதல் பரிசு: ரூ. 5,00,000-
அனைத்து வரிசைக்கும் பொது
யு 209361

ஆறுதல் பரிசு ரூ. 2,500- இரண்டு பரிசுகள்
பரிசு பெற்ற வரிசையைத் தவிர மற்ற இரு வரிசைகளுக்கும்

எம் 209361 என் 209361

இரண்டாம் பரிசு: ரூ. 2,00,000-
அனைத்து வரிசைக்கும் பொது
என் 183411

மூன்றாம் பரிசு ரூ. 5,000 (24 பரிசுகள்)
வரிசைக்கு எட்டு வீதம்

| எம் | என் | டி |
|---|---|---|
| 344296 | 315399 | 376109 |
| 303248 | 341540 | 344325 |
| 273051 | 269671 | 468229 |
| 234606 | 413141 | 465365 |
| 417578 | 513146 | 418499 |
| 243698 | 243012 | 539370 |
| 421228 | 496883 | 444236 |
| 573492 | 408047 | 462728 |

எல்லா வரிசைக்கும் பொது

நான்காம் பரிசு: ரூ. 1,000- (90 பரிசுகள்)
கீழ்க்கண்ட பரிசுச்சீட்டு எண்களுக்கு

| | | | | |
|---|---|---|---|---|
| 196555 | 236819 | 312689 | 436929 | 534189 |
| 144130 | 271892 | 360231 | 493908 | 528319 |
| 123829 | 239667 | 338511 | 462272 | 515882 |
| 164545 | 281602 | 326183 | 454081 | 501473 |
| 113912 | 233300 | 377763 | 482040 | 529243 |
| 119590 | 279930 | 376037 | 458292 | 594174 |

ஐந்தாம் பரிசு: ரூ. 500- (150 பரிசுகள்)
கடைசி ஐந்து எண்களில் முடியும் அனைத்து பரிசுச் சீட்டுகளுக்கும்

| | | | | |
|---|---|---|---|---|
| 06433 | 29661 | 43112 | 68662 | 81912 |
| 10195 | 31890 | 57022 | 78010 | 94379 |

ஆறாம் பரிசு: ரூ. 50- (1500 பரிசுகள்)
கடைசி நான்கு எண்களில் முடியும் அனைத்து பரிசுச் சீட்டுகளுக்கும்

| | | | | |
|---|---|---|---|---|
| 0298 | 2725 | 4560 | 6579 | 8336 |
| 1748 | 3300 | 5603 | 7814 | 9651 |

ஏழாம் பரிசு: ரூ. 20- (3000 பரிசுகள்)
கடைசி நான்கு எண்களில் முடியும் அனைத்து பரிசுச் சீட்டுகளுக்கும்

| | | | | |
|---|---|---|---|---|
| 0168 | 2823 | 5678 | 7320 | 0287 |
| 3081 | 5907 | 8504 | 1121 | 3100 |
| 6345 | 8056 | 1172 | 4138 | 6286 |
| 9686 | 2438 | 4065 | 7127 | 9386 |

எட்டாவது பரிசு: ரூ. 10- (15000 பரிசுகள்)
கடைசி மூன்று எண்களில் முடியும் அனைத்து பரிசுச் சீட்டுகளுக்கும்
095 272 432 633 875 175 399 569 784 988
மேற்கண்ட எண்களில் முடியும் பரிசுச் சீட்டுகளின் அடிக்கட்டைகளுக்கு விற்பனையாளர் பரிசாக ரூபாய் 5- வழங்கப்படும்.

ஒன்பதாவது பரிசு: ரூ. 5- (15000 பரிசுகள்)
கடைசி மூன்று எண்களில் முடியும் அனைத்து பரிசுச் சீட்டுகளுக்கும்
061 240 401 636 835 110 304 567 789 933
மேற்கண்ட எண்களில் முடியும் பரிசுச்சீட்டுகளின் அடிக்கட்டைகளுக்கு விற்பனையாளர் பரிசாக ரூபாய் 5- வழங்கப்படும்.

பரிசுத்தொகை பெற விண்ணப்பிக்க வேண்டிய கடைசி நாள் 1-2-1988

அடுத்த ''திருமகள்'' குலுக்கல் 9 12-87 அன்று சென்னையில் நடைபெறும்.

''திருமகள்'' மற்றும் கிறிஸ்துமஸ் சிறப்புக்குலுக்களுக்கான பரிசுச் சீட்டுகள் விற்பனையில் உள்ளன.

இயக்குநர்
தமிழ்நாடு பரிசுச்சீட்டு
சென்னை-1

DIPR-2793-MS-87 -ELEGANT

# கொடி நாள் சபதம்!

நாட்டைக்காக்கும்பணியில் தங்களை ஈடுபடுத்திக் கொண்டு இன்னுயிரை ஈந்த வீரச்செம்மல்களின் குடும்பத்தைக்காக்கவும். போரின் போது உடல் உறுப்புகளை இழந்து ஊனமுற்ற வீரர்களையும் அவர் தம் குடும்பத்தையும் காத்திட ஒவ்வொரு ஆண்டும் கொடி நாள் கடை பிடிக்கப்படுகிறது.

கொடி நாளில் மக்களை பெருமளவு ஈடுபடச் செய்ய மக்களிடமிருந்துநிதியைப் பெறவும் அந்தந்த மாநிலங்களில் முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன.

கடந்த ஆண்டைய கொடி நாளின் போது புரட்சித் தலைவர் தனது சார்பில் நிதியை அள்ளி உண்டியலில் போட்டார்.

முன்னாள் படை வீரர்களின் நலனைக் காப்பதில் அரசு முனைப்புடன் செயல்பட்டு வருகிறது.

போரில்வீரமரணம் எய்திய அல்லது ஊனமுற்ற படை வீரர்களின் குழந்தைகட்கு வேலை வாய்ப்பில் முன்னுரிமை அளிக்கப்படுகிறது

முன்னாள் படைவீரர்களுக்கு ஒதுக்கீடு செய்யப்பட்ட மத்திய மாநில அரசுத் துறை-நிறுவனங்களில் உள்ள பணியிடங்களுக்கு முன்னாள் படை வீரர்கள் பரிந்துரை செய்யப்படுகின்றனர்.

படையில் பணிபுரிந்த கால வரையுடன் மூன்று வருடம் வரை மத்திய அரசின்வேலைகளுக்குவயதுவரம்புச்சலுகையும் ஆதிதிராவிடர்கள் பழங்குடியினர் மற்றும் பிற்பட்ட வகுப்பினருக்கு 53 வயது வரையும் ஏனையோருக்கு 48 வயதுவரையும் தமிழ்நாடு அரசு வேலைகளுக்கு வயது வரம்புச் சலுகையும்அளிக்கப்படுகிறது.

## சுய வேலை வாய்ப்பு

தொழிற்பேட்டைகளில் தொழிற் கூடங்கள்-காலி மனைகளில் முன்னாள் படைவீரர்களுக்கு 10 விழுக்காடு ஒதுக்கீடு ஜெய் ஜவான் பெட்டிக்கடைகள் வழங்குதல், தமிழ்நாடு கூட்டுறவு பால் உற்பத்தியாளர் இணையத்திலிருந்து முன்னுரிமையில் முன்னாள் படைவீரர்களுக்குத் தானியங்கி பால் வழங்கும் இயந்திரம் பெறுவதில் உதவி செய்தல், முன்னாள்படைவீரரை சிறு தொழில்களில் பயிற்சி அளித்து அவர்களுக்குத் தொழிற் துவக்க மூலதன உதவி அளித்தல். முன்னாள் படைவீரர்களுக்கு சுயவேலை வாய்ப்பு என்ற திட்டத்தின் கீழ் ரூபாய் 12 லட்சம் வரை தமிழ்நாடு தொழிற் காப்பீட்டுக் கழகம் மூலம் கடன் அளித்தல் ஆகிய உதவிகள் வழங்கப்படுகிறது.

வங்கிக் கடன் வட்டி மான்ய உதவித் திட்டத்தின் கீழ் வங்கிகளிலிருந்தும் மற்றும் தமிழ்நாடு தொழில் முதலீட்டுக் கழகத்திலிருந்தும் தொழில் புரியக் கடன் பெறும் முன்னாள் படைவீரர்கள், அவர்தம் விதவைகளுக்கு ரூபாய் 5,000- வரையுள்ள கடனுக்கு 4 விழுக்காட்டிற்கு அதிகமான வட்டி தொகையும் ரூபாய் 5000க்கு மேல் ரூபாய் 50,000 வரையுள்ள கடனுக்கு 7 விழுக்காட்டிற்கு அதிகமுள்ள வட்டித் தொகையும் தொகுப்பு நிதியிலிருந்து மான்யமாக வழங்கப்படுகிறது.

மருத்துவ பொறியியல் கல்லூரிகள், தொழில் நுட்ப கல்லூரிகள் ஆசிரியர்பயிற்சிக் கல்லூரி பள்ளி, விவசாயக் கல்லூரி சட்டக்கல்லூரி டி.பார்மசிகல்வி, கூட்டுறவுப் பயிற்சி நிறுவனம் முதலியவற்றில் முன்னாள் படைவீரர்களின்குழந்தைகட்குஇட ஒதுக்கீடு அளிக்கப்படுகிறது.

தமிழ்நாடு முன்னாள் படைவீரர் நல நிதியிலிருந்து பள்ளி கல்லூரிகளில் கல்வி பயிலும் முன்னாள்படைவீரர்களின் குழந்தைகட்கு கல்வி உதவித்தொகை வழங்கப்படுகிறது.

முன்னாள் படைவீரர்களின் விதவையர் மற்றும் பெண்களுக்கு தையற் கலையில் பயிற்சி அளிக்கப்படுவதுடன் தட்டெழுத்து மற்றும் சுருக்கெழுத்துபயிற்சியும் அளிக்கப்படுகிறது.

## நிதி உதவி

இந்தியா சுதந்திரமடைந்த பின் நடந்த எல்லாப் போர்களிலும் வீர மரணம் எய்திய வீரர்களின் விதவைகளுக்கு வருடாந்திரபராமரிப்புப் படி வழங்கப்படுகிறது.

போரில் வீர மரணம் எய்திய படைவீரரின் மகளுக்கு 1500 ரூபாய் திருமண மான்யமாக வழங்கப்படுகிறது. ராணுவ பயிற்சி நிலையங்களில் பயிற்சி பெறுவோருக்கு வட்டியில்லாக் கடனுதவி வழங்கப்படுகிறது.

ஆதரவற்ற நிலையிலுள்ள வயது முதிர்ந்த முன்னாள் படை வீரர்கள் அவர் தம் விதவைகளுக்கு ஆயுட்காலம் முழுமைக்கும் மாதாந்திரபராமரிப்பு நிதி உதவி வழங்கப்படுகிறது,

## சட்ட உதவி

படைப்பிரிவைச்சார்ந்தவர்களுக்கு நீதிமன்றங்கள் மூலம் தீர்வு செய்யவேண்டிய வழக்குகளில் இலவச சட்ட உதவி பெற உதவப்படுகிறது.

தமிழ்நாடு அரசிலிருந்து முன்னாள் படைவீரர்கள் மற்றும் போரில் வீரமரணம் எய்திய ஊனமுற்ற படை குடும்பங்களுக்கு வீட்டுமனைகள் விவசா நிலங்கள் ஒப்படைசெய்வதில் முன்னுரிமை.

தமிழ்நாடு வீட்டுவசதிவாரியத்தினால் தவணை முறையில் விற்கப்படும் வீடுகள் குடியிருப்புத்தட்டுக்கள் வீட்டுமனைகள் பெறுவதில் முன்னாள் படை வீரர்களுக்கு 7½சதவிகிதம் ஒதுக்கீடு இந்த 7½யில் ''பரம்வீர்சக்கரா'' ''மகாவீர் சக்கரா'' மற்றும் ''வீரசக்கரா'' விருது பெற்றவர்களுக்கு ஒரு சதவிகிதம் ஒதுக்கீடுசெய்யப்பட்டுள்ளது

முன்னாள் படை வீரர்களின் நலனைக் காப்பதில் மத்திய மாநில அரசுகள் முனைவப்புடன் ஈடுபடுவதுடன் தனியார் அமைப்புகள்பொதுமக்கள்அனைவரும் முன்னாள் படை வீரர்களின் நலனைக் காக்க தங்களை ஈடுபடுத்திக் கொள்ள வேண்டும்.

நாட்டுக்காக தங்களை அர்ப்பணித்துக் கொண்ட தியாக தீபங்களின் குடும்பத்தைக் காக்கவும், நாட்டுக்காக தீரச் சேவை புரிந்து ஊனமுற்ற முன்னாள் படைவீரர்களின் நலன்காக்கவும் இந்நாளில் சபதம் ஏற்போம்.

# தஞ்சை மாவட்டத்தில் ஆயிரம் ஹெக்டேரில் சோயாபீன்ஸ் சாகுபடி

தஞ்சாவூர், டிச. 6-
தஞ்சை மாவட்டத்தில் ஆயிரம்ஹெக்டேரில் சோயா பீன்ஸ் சாகுபடி செய்யப் படுகிறது.

தஞ்சாவூர் மாவட்டத்தில் கீழ்க்காணும் 8 ஊராட்சி ஒன்றியங்கள் நடப்பு பருவத்திற்கு ஆயிரம் ஹெக்டேரில் 'சோயா பீன்ஸ்' சாகுபடி செய்வதற்காக தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளன.

தஞ்சாவூர், மன்னார்குடி பாபநாசம், பட்டுக்கோட்டை மயிலாடுதுறை, சேதுபாவா சத்திரம், திருவாரூர், பேராவூரணி. ஆகிய ஊராட்சி ஒன்றியங்களில் உள்ள விவசாயிகளுக்கு சோயாவிதை 5 கிலோ மற்றும் பூச்சி மருந்துகள் உள்ளடங்கிய ரூபாய் 30-மதிப்புள்ளவை விவசாயத் துறை துணை இயக்குநரால் (எண்ணெய் வித்துக்கள்) இலவசமாக வழங்கப்படும். சோயாபீன்ஸ் சாகுபடிக்குத் தேவையான தொழில் நுணுக்க உதவிகள் விவசாயிகளுக்கு அளிக்கப்படும். உற்பத்தி செய்யப்படும் சோயாபீன்ஸ் முழுவதையும் குவிண்டால் 1க்கு ரூபாய் 325 வீதம் சக்தி சர்க்கரை ஆலையினால் கொள்முதல் செய்துகொள்ளபடும் விவசாயிகள் இந்த அரிய சந்தர்ப்பத்தினை பயன்படுத்திசோயாபீன்ஸ்சாகுபடி செய்து பயனடையுமாறு மாவட்ட வருவாய் அலுவலா கே. ஆர் கிருஷ்ணமூர்த்தி கேட்டுக்கொண்டுள்ளார்.

## தட்டச்சு பயிற்சி: முன்னாள் ராணுவ வீரர்களுக்கு அரசு உதவி

தஞ்சாவூர், டிச. 6-
தஞ்சாவூர் முன்னாள் இராணுவத்தினா அலுவலகத்திலுள்ள தட்டச்சு சுருக்கெழுத்து பயிற்சிப் பள்ளியில் முன்னாள் இராணுவத்தினர் அல்லது தற்சமயம் இராணுவத்திலுள்ளவர்களின் குழந்தைகளுக்கு தட்டச்சு மற்றும்சுருக்கெழுத்து பயிற்சி அளிக்கப்படும் பயிற்சியில் சேர விரும்புவோர் தஞ்சாவூர் முன்னாள் இராணுவத்தினர் நலஅலுவலகத்தைதொடர்பு கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள் ரூபாய் 500க்கு, மேற்படாத யாத வருவாய் உள்ள முன்னாள் இராணுவத்தினர்களின் வாரிசுதாரர்களின் ரூபாய்120 உதவித் தொகை வழங்கப்படும் என தஞ்சை மாவட்ட செய்தி குறிப்பில் கூறப்பட்டுள்ளது.

## மிலிட்டரி என்ஜினியர் சர்வீஸ்

காரிஸன் என்ஜினியர் (P) fy B/R எண் 3, ஆவடி சென்னை-54 அவர்கள் B-CIHV ஆவடியில் பிராந்திய புள்ளியியல் வங்கிக்கான அலுவலகம் மற்றும் தொழில் நுட்ப அரங்கு கூடவும் T. 72 புராஜக்ட் ஆபீஸ் ஆகியவை, வெளிப்புற சர்வீசுகளுடன் கட்டிமுடிக்க டெண்டர் கொடுப்பதற்கு உரிய பிரிவு காண்ட்ராக்டர்களிடமிருந்து 12-12-87 வரை தனித்தனி விண்ணப்பங்களை வரவேற்கிறார்கள். திட்ட மதிப்பீடு ரூபாய்5.25லட்சம்டேவணித் தொகை 7,875

davp-683-1941-87

## அமராவதி பாசனம்: அமைச்சரிடம் லியாகத் அலிகான் மனு

சென்னை, டிச. 6-
உடுமலைப்பேட்டை தொகுதியில் அமராவதி ஆற்று நீர் பாசனப் பகுதிகளில் புஞ்சை பயிர்களுக்கு டிசம்பர் 10ந்தேதியன்று தண்ணீர் திறந்து விடுமாறு அமைச்சர் சாத்தூர் ராமச்சந்திரனிடம் கழக மாணவர் அணிச் செயலாளர் லியாகத்அலிகான் கேட்டுக் கொண்டார்.

புஞ்சை பயிர்களான எள், கடலை, கொள் ஆகியவற்றுக்கு தண்ணீர் விடுமாறு உடுமலை பகுதி விவசாயிகள் சார்பில் லியாகத்அலிகான் கோரிக்கை மனுகொடுத்தார் அப்போது திருமலைசாமி கவுண்டர் எம்எல்ஏ கோவைமாவட்ட எம் ஜி ஆர் இளைஞர் அணி துணை செயலாளர் கே.ஜி. சண்முகம், மடத்துக்குளம் ஒன்றிய தலைவர் தங்கவேலு, ஒன்றிய கழக அவைத்தலைவர் சாமராஜப்பட்டி சண்முகவேலு, உடுமலை சந்தை சுப்பிரமணியம் மற்றும் ஏராளமான விவசாயிகள் உடன் சென்றனர்.

கோரிக்கை மனுவை பெற்றுக்கொண்ட அமைச்சர் சாத்தூர் ராமச்சந்திரன், நீர்பாசன தலைமை பொறியாளரிடம் கலந்து பேசி ஆவன செய்வதாக உறுதியளித்தார்.

## விவசாயிகளுக்கு பயிற்சி முகாம்

வேலூர். டிச. 6
விவசாயிகளுக்கு நவீன தொழில் நுட்ப விவசாய பயிற்சி வடாற்காடு மாவட்டத்திலுள்ள ராஜாபுரம் என்ற கிராமத்தில் நடைபெறுகிறது இந்தப்பயிற்சியை தமிழ்நாடு சேமிப்பு கிடங்கு நிறுவனம் நடத்துகிறது.

இந்த முகாம வரும் 9ந்தேதி நடைபெறுகிறது நிகழ்ச்சியில் ஐ ஏ எஸ் அதிகாரிகள் சுகனேஸ்வர் எச் எம் பாண்டே மாலதி, நாடாளுமன்ற உறுப்பினா ஏ சி சண்முகம் உள்ளிட்டோர் பங்கேற்றனர்.

## தஞ்சையில் முன்னாள் ராணுவ வீரர் கோரிக்கை தீர்ப்பு நாள்

தஞ்சை, டிச. 6-
தஞ்சை மாவட்ட ஆட்சித் தலைவர் அலுவலகத்தின் பிரதான கட்டிடத்தில் ஒவ்வொரு மாதமும் மூன்றாம் வெள்ளிக்கிழமை காலை 11 மணிக்கு முன்னாள் ராணுவ வீரர்களின் துயர் நீக்க நாள் நடைபெறுகிறது இதனை பயன்படுத்தி முன்னாள் ராணுவ வீரர்கள் தங்கள் குறைகளை மாவட்ட ஆட்சித் தலைவரிடம் எடுத்துக்கூறி பயன்பெறுமாறு மாவட்ட வருவாய் துறை அலுவலர் கே. ஆர். கிருஷ்ணமூர்த்தி கேட்டுக்கொண்டுள்ளார்.

## காங்கிரஸ் முதல்வர்கள் பிரதமருடன் சந்திப்பு

புதுடெல்லி, டிச. 6-
பிரதமர் ராஜீவ்காந்தியுடன் ஆறுமாநிலமுதல்வர்கள் தனித்தனியேசந்தித்து பேசினார்கள்.

மராட்டிய முதல்வர் எஸ். பி. சவான் பிரதமரைச் சந்தித்து தனது மாநில பிரச்சினைகளைச் சொன்னார்.

வசந்த்ராவ் பட்டீல் புதிதாக விவசாய இயக்கத்தை தொடங்கியுள்ளார் அந்த இயக்கத்தினால் மராட்டிய அரசுக்கு பெரும் பிரச்சினை தோன்றியுள்ளதாக பிரதமரிடம் சவான் புகார் செய்தார்.

பீகார் முதல்வர் பிந்தேஸ்வர்துபே, ஒரிசா முதல்வர் ஜே.பி.பட்நாயக் ஆகியோர் பிரதமரை தனித்தனியே சந்தித்து தங்கள்மாநில அரசியல் நிலைமைகளைக் கூறினர்.

பிந்தேஸ் வர்துபே தனக்கு போட்டியாக உள்ள ஜெகநாத்மிஸ்ரா பற்றிபுகார் செய்தார்.

மத்திய பிரதேச முதல்வர் மோதிலால்வோரா பிரதமரைச் சந்தித்து போபால் விஷவாயுவிபத்தில் பாதிக்கப்பட்டோருக்கு அரசு செய்து வரும் உதவிகளை விளக்கினார் போட்டி கோஷ்டி பற்றியும் புகார் செய்தார்.

மணிப்பூர் முதல்வர்ரிஷாங் கெய்ஷிங் அருணாசல பிரதேசமுதல்வர் ஜிகாங்அபாங் ஆகியோரும் பிரதமரை சந்தித்துப் பேசினர்.

## கஞ்சா வளர்ப்பு: 11பேர் கைது

சென்னை, டிச. 6-
கல்ராயன்மலையில் கஞ்சா செடிவளர்த்ததாக பிச்சையா உட்பட 11 பேர் கைது செய்யப்பட்டனர்.

6லட்சரூபாய் மதிப்புள்ள 300 கிலோ கஞ்சா அழிக்கப்பட்டது.

## கள்ளச்சாராய வியாபாரிக்கு ஓராண்டு சிறை

சென்னை, டிச. 6-
சென்னையை அடுத்த கொடுங்கையூரை சேர்ந்த ராஜேந்திரன் (வயது 31) கள்ளச்சாராயம் வியாபாரி இவர் மீது ஏற்கனவே 4 வழக்குகள் உள்ளன ராஜேந்திரனை ஒரு ஆண்டு சிறையில்அடைக்ககலெக்டர் பாண்டியன் உத்தரவிட்டார் அதன்படி ராஜேந்திரனை மதுவிலக்கு போலீசார் கைது செய்துசிறையில் அடைத்தனர்





Edited and published by K. RAVINDRAN on behalf of Thangamani Publication and Printed by all India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson manickam Road, MADRAS - 600 029.

# உடன்கட்டை ஏறுதல்: கழக எம். பி. நடராசன் கண்டனம்

புதுடெல்லி, டிச. 6-
ரூப்கன்வரை உடன்கட்டை ஏறவைத்தது போன்ற சம்பவங்கள் நடைபெறுவது கண்டிக்கத்தக்கது எனகழக எம்பி நடராசன் நாடாளுமன்றத்தில் கூறினார்.

மக்கள்சபையில் கழகஉறுப்பினர் கே.ஆர்.நடராசன் பேசுகையில் கூறியதாவது:-

1987 ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 4ம் நாள் ராஜஸ்தான் மாநிலத்தில் தெளராலா என்னுமிடத்தில் நடைபெற்ற மிகவும் மிருகத்தனமாக நடைபெற்ற 'சதி' நிகழ்ச்சியை வன்மையாக கண்டிக்கிறேன். 'சதி'யில் கலந்து கொண்டு உயிர் துறந்த ரூப்கன்வர் மெட்ரிகுலேசன் தேர்வில் வெற்றி பெற்றவர், அவருடைய கணவர் பி. எஸ்.ஸி. பட்டதாரி ரூப்கன்வரின் மாமனார் பள்ளி ஆசிரியராக இருந்தும் இந்த நிகழ்ச்சிக்கு உடந்தையாக இருந்திருக்கிறார்.

### மூட நம்பிக்கைக்கு கடும் எதிர்ப்பு

மேலும் இந்த சதி நிகழ்ச்சி ஏறத்தாழ 5 ஆயிரம் பேர்கள் முன்னிலையில் நடைபெற்றிருக்கிறது. இந்த பெண்ணை ஒருவரும்காப்பாற்ற முன்வரவில்லை இறந்தகணவருடைய சிதைகொளுந்து விட்டுஎரியும் தீயில் அனைவருடைய முன்னிலையிலும் ரூப்கன்வரும் கொடூரமாக எரிக்கப்பட்டாள் எரிக்கப்பட்ட 13 நாட்களில் இலட்சக்கணக்கான மக்கள் ரூப்கன்வரை 'சதிமாதா' என்று அழைத்து அந்தஇடத்தை கோவிலாக்கி வணங்கினார்கள்.

இந்த 'சதி' நிகழ்ச்சியை இந்தியாவில் உள்ள அனைத்துத் தலைவர்களும் ஒட்டுமொத்தமாககண்டனம் தெரிவித்தனர் 19ம் நூற்றாண்டில் இராஜாராம் மோகன்ராய் இத்தகைய கொடுமையான 'சதி' நிகழ்ச்சிகளை கடுமையாக எதிர்த்ததினால்அப்பொழுது ஆட்சி புரிந்த கவர்னர் ஜெனரல் 'சதி' நிகழ்ச்சி நடைபெறுவதை ஒழித்தார்.

தமிழ்நாட்டில் தந்தை ஈ. வே. ரா. பெரியார், இத்தகைய மூட நம்பிக்கைகளையும், இதுபோன்ற கொடுமையான நிகழ்ச்சிகளையும் கடுமையாக எதிர்த்தார். அதில் 'தந்தை பெரியாரும்' வெற்றி கண்டார் வட இந்தியாவிலும்இதுபோன்ற ('சதி' போன்ற) கொடுமையான நிகழ்ச்சிகளையும், மக்களிடையேஉள்ள மூட நம்பிக்கைகளையும் ஒழிப்பதற்காகவும் வடஇந்தியாவில் ஒரு 'பெரியார்' தோன்ற வேண்டும். இதற்கிடையே நமது மத்திய அரசு இது போன்ற 'சதி' நிகழ்ச்சிகள் நடைபெறாதவாறு கடுமையான சட்ட திட்டங்களை இயற்ற வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறு நடராசன் கூறினார்.